# பகவான் சிவானந்தரின் ஞான விருந்து





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு



ஸ்ரீ சுவாமி சிவானந்தா பிரார்த்தனை மண்டபம், இராசிபுரம்.

# பகவான் சிவானந்தரின் ஞான விருந்து

**●**

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா.**

தமிழாக்கம் :

**ஸ்ரீ சுவாமி இராமானந்தா**

*சிவானந்த ஜயந்தி விழா ஞாபகார்த்த விசேஷ வெளியீடு.*







வெளியிடுவோர் :

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

*சிவானந்தா ஆஸ்ரமம்*

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

**1975-ஆம் ஆண்டு செப்டம்பர் மாத விசேஷ வெளியீடு.**

பகவான் சிவானந்தரின் ஞான விருந்து தொடர் – 3.



* * *

*Translated from*
" WISDOM OF SIVA "



சி வ ச ண் மு க வி ல ா ஸ்,
கைத்தறி ஜவுளி ஸ்டோர்ஸ்,
5, சின்ன அக்ரஹாரம்,
இராசிபுரம். (சேலம் ஜில்லா)
( Proprs : T. P. செல்லய்யா & சன்ஸ். )

ஸ்தாபனத்தின் 30-ஆவது ஆண்டு நிறைவு விழா
ஞாபகார்த்த அன்பளிப்பு.



Printed at The Literary Press, Salem - 636001.



# இராஜயோகம்

1. பதஞ்சலி முனிவர் இயற்றிய யோக சாஸ்திரத்திற்கு இராஜயோகம் எனப்பெயர். இதை அஷ்டாங்க யோகம் எனவும் கூறுவர்.

2. இது இயமம் - நியமம் - ஆசனம் - பிராணாயாமம் – பிரத்தியாகாரம் – தாரணை – தியானம் – சமாதி ஆகிய எட்டு அங்கங்களைக் கொண்டது.

3. இயமமாவது, அஹிம்சை - சத்தியம் - அஸ்தேயம் (களவு செய்யாமை) – பிரம்மச்சரியம் – அபரிகிரகம் (பிறர் தரும் கொடையினைக் கொள்ளாமை, பேராசையைத் தவிர்த்தல்) என்பனவாம்.

4. தூய்மை (உள்ளும் புறம்பும்), மனமுவந்திருத்தல், தவம், தத்துவ நூலோர்தல், தெய்வம் வழிபடல் அல்லது உடல் - பொருள் – ஆவியை இறைவனுக்கு அர்ப்பணம் செய்தல் ஆகியவை நியமமாம்.

5. ஆசனமாவது ஒரு இருக்கை நிலையை அப்பியசித்தலாம்.

6. பிராணயாமமாவது, பிராணனைத் தன் வயப்படுத்துதல்; மூக்கில் இயங்கும் பிராண – அபான வாயுக்களைச் சமப்படுத்துதல்.

7. வெளி நோக்கிச் செல்லும் இந்திரியங்களைப் பொருள்களிடத்திலிருந்து மீட்டி அவற்றை உள்முகமாகத் திருப்புவது பிரத்தியாகாரமாகும்.

8. பிரத்தியாகாரத்தால் உள்முகமாகத் திருப்பப் பட்ட இந்திரியங்கள் மனத்துடன் ஒன்றித்து விடு கின்றன.

9. தாரணையாவது உள்ளேயோ வெளியேயோ ஏதாவது ஒரு பொருளில் மனதை நிறுத்தி வைப்ப தாகும்.

10. மனம் ஏகாக்கிரமடைந்து இலட்சியத்தையே நோக்கி இடையீடின்றிச் செல்லுமாகில் அதுவே தியானமாகும்.

11. தியானத்தின்போது மனதில் பரம்பொருளைப் பற்றிய விருத்தி ஒன்றுதான் இருக்கும். ஏனைய விருத்திகள் அனைத்தும் அறுபட்டுப் போகும்.

12. சமாதி என்பது பிரம்மத்துடன் கலப்பதாகும். இதுவே பிரம்மானுபூதி. இந்நிலையில் மனம் வேலை செய்வதில்லை. மனம் ஆத்மனில் ஒடுங்கி விடுகின்றது.

13. இராஜயோகி இந்த எட்டுப்படிகளின் வழி யாக ஆத்மீக ஏணியில் ஏறுகின்றான்.

14. இயம - நியமத்தின் மூலமாக நன்னெறிப் பயிற்சிகளைப் பெற்று சாதகன் தன்னைப் பரிசுத்தப் படுத்திக் கொள்கின்றான்.

15. பத்மாஸனம் - சித்தாஸனம் – சுகாஸனம் – ஆகிய இவற்றில் ஏதாவது ஒன்றில் மூன்று மணி நேரம் அசையாது உட்காரப் பழகிக்கொள். அப்பொழுது ஆஸன ஜயம் ஏற்படும். ஆஸன ஜயம் இருந்தால் தான் பிராணாயாமம் - தாரணை - தியானம் எளிதாகக் கைகூடும்.

16. ஆஸனப் பயிற்சிமூலம் அவன் சரீரத்தின் உள்ளுறுப்புகளுக்கு சக்தியைக் கொடுக்கின்றான்.

17. பிராணயாமம் மூலம் சாதகன் மனதின் சஞ்சலத்தை நீக்கிக் கொள்கின்றான்; நாடிகளையும் சுத்தப் படுத்திக் கொள்கின்றான்.

18. பிராணயாமம் உடம்பிலுள்ள பஞ்ச பூதங்களையும் சுத்தி செய்கின்றது. எனவே அன்றாடம் சந்தியா வேளைகளிலும் தெய்வ வழிபாடுகளுக்கு முன்பும் தவறாது பிராணயாமம் செய்ய வேண்டும்.

19. பிராணயாமம் மூலம் பரிசுத்தமடைந்த மனமே ஆத்மனில் யாண்டும் நிலைபெற்று நிற்க வல்லது.

20. பிராணனுடைய வெளித்தோற்றம் மூச்சு அதை அடக்குவதால் சூக்ஷ்மமாக இருக்கும் பிராணனையும் அதாவது சக்தியையும் அடக்கலாம்.

21. பிராணயாமம் மூலம் வியாதிகள் நீங்குகின்றன; குண்டலினி சக்தி எழுகின்றது; ஆரோக்கியமும் ஆயுளும் விருத்தியடைகின்றன.

22. பிரத்தியாகாரம் மூலம் சாதகன் மனஉறுதியையும் நிம்மதியையும் தெளிவையும் பெறுகின்றான்.

23. தாரணை மூலம் ஏகாக்கிர சித்தத்தைப் பெறுகின்றான். தாரணை கைகூடுவதற்கு இயம - நியமப் பயிற்சிகள் இன்றியமையாதவை.

24. தியானம் மூலம் பொறிகள் கட்டுப்படுகின்றன; மனம் ஒருமைப் படுகின்றது; ஆன்மீக சக்தி வலுக்கின்றது; அசுத்த எண்ணங்கள் எரிபடுகின்றன; வீர்யமும் ஓஜஸ் சக்தியாக மாறுகின்றது.

25. பிரம்மச்சரியமும் வைராக்கியமும் இல்லையேல் தியானம் ஒருக்காலும் சித்திக்காது.

26. ஆஸன ஜயம், இதய சுத்தி, பிரத்தியாகாரத் தேர்ச்சி, ஒருமைப்பட்ட மனம் ஆகியவை சமாதி கைகூட ஹேதுக்களாம்.

27. சமாதி மூலம் ஜனன மரணத்தை ஒழித்து அமர நிலையை அடைகின்றான்.

28. இயமம் - நியமம் யோகமாகிய மரத்தின் வேர்; ஆஸனம் – பிராணாயாமம் - பிரத்தியாகாரம் அதன் கிளைகள்; தாரணை – தியானம் அதன் மலர்கள். நிர்விகல்ப சமாதி அதன் கனி.

29. பிரகிருதியுடன் சம்பந்தப்படாதே. அப்பொழுது உன்னில் துக்கம் ஒழியும், பேரானந்தமும் பொங்கும். இதுதான் இராஜயோகத்தின் சாரம்

30. அற்புத சக்திகளையும் சித்திகளையும் காண்பிப்பவன் உண்மையான யோகியாகான். அவன் ஆளை மயக்கும் ஜால வித்தைக்காரனே. எனவே அவனுடன் தொடர்பு கொள்ளாதே.

31. பிரம்மச்சரியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்தல் சரீரயோகம்; மனதையும் வாக் இந்திரியத்தையும் கட்டுப்படுத்துதல் மானஸீக யோகம்.

32. பொல்லாத பொறிகளின் ஆதீனத்திற்கு நீ வசப்படுவாயாகில், காயம் உனது கட்டுக்கு அடங்காது போகுமாயின், காம உணர்ச்சிகள் உள்பட எல்லா தீய உணர்ச்சிகளும் உன்னைக் கீழ்மையில் தள்ளுமாகில் உனக்கு ஒருக்காலும் நிரந்தர சாந்தியும் ஒருமுகப்பட்ட மனமும் ஏற்படா. எனவே இராஜ யோகத்தை முறையுடன் பயிலு.

33. சுத்த மனம் (அல்லது) சாத்வீக மனத்துடன் ஒன்றித்து நிற்பாயாகில் அசுத்த மனதில் எழும் எண்

ணங்களினுல் பாதிக்கப்படமாட்டாய். அசுத்த மனதில் எண்ணங்கள் தோன்றி மறைவதையும் சாக்ஷிமாத்திர மாய் பார்ப்பாய்.

34. விஷயப்பற்றுக்கள் உன்னில் அறவே ஒழியு மாகில், ஆசைகளுக்கும் ஆசைகளின் தூண்டுதல் களுக்கும் காரணமாகிற சம்ஸ்காரங்கள் உன் மனதில் அற்றுப் போகுமாகில், உன் மனம் அசையாது ஆத் மனில் பொருந்தி நிற்குமாகில் நீ யோகத்தில் நிலை பெற்றவனே; யோகாரூடனே.

35. வெற்றி - தோல்வி, சுகம் – துக்கம் போன்ற துவந்துவங்களை வென்றவனே யோகியாவான்.

36. இறைச்சி உண்பதால் காம உணர்ச்சிகள் உள்பட எல்லா தீய உணர்ச்சிகளும் மனதில் வலு வடைந்து ஜீவனைக் கீழ்மையில் தள்ளுகின்றன. எனவே சாதகன் அதைத் தீண்டுதல் கூடாது.

37. இராஜயோகத்தை அடைவதற்கு ஹடயோ கம் ஒரு ஏணியே.

38. ஆசனம், பிராணுயாமம், முத்திரை ஆகிய வைகளை அப்பியசிக்கும் முறையைப்பற்றி ஹடயோகம் கூறுகின்றது. இவற்றின் மூலம் தேகம்-நாடி-பிராணன் களின் சுத்தியைப் பெறுதலேதான் ஹடயோகத்தின் குறிக்கோள்.

39. ஹடயோகம் மூலம் ஆத்மனை அறிய முடி யாது. நீண்ட ஆரோக்கிய வாழ்வையும் தேக வலிவையுமேதான் பெற முடியும்.

40. ஹடயோகி தன் சாதனையை சரீரம் – பிராண னிலிருந்து ஆரம்பிக்கின்ருன். இராஜயோகியோ மனதிலிருந்து ஆரம்பிக்கின்ருன்.

41. ஹடயோகி ஆஸனம்-பந்தம் - பிராணயாமம் ஆகியவைகளை முக்கிய சாதனங்களாகக் கொள்கின்றான். இராஜயோகியோ தியானத்தையே முக்கியமாகக் கொள்கின்றான்.

42. மூலாதாரத்தில் குண்டலினி சக்தி மூன்றரை மடிப்புகளுடன் பாம்பின் வடிவமாக செயலற்று உறங்கிக்கொண்டிருக்கிறது. இச்சக்தியை இராஜயோகி தாரணையினாலும் சுத்த மனதினாலும் மூலாதாரத்திலிருந்து எழுப்புகிறான். எழுப்பப்பட்டதும் இது முள்ளந்தண்டின் நடுவே உள்ள சுழுமுனை நாடி வழியாக நுழைந்து சுவாதிஷ்டான மணிபூரம்-அநாகதம்-விசுத்தம் - ஆக்ஞை என்ற சக்கரங்களைத் துளைத்துக் கொண்டு ஆயிரமிதழ் தாமரையாகிய சகஸ்ரார சக்கரத்தை அடைகின்றது. இந்த ஏழாவது நிலையை மனது எட்டுங்கால் ஆத்மசாதகனுக்கு சமாதி நிலை வந்து விடுகிறது. அந்நிலையில் அவன் பிரம்மஞானி ஆகிவிடுகின்றான்.

43. இச்சக்தியை ஹடயோகி ஆசனம் - பிராணயாமம் - பந்தம் - முத்திரை ஆகியவைகளின் மூலம் எழுப்புகின்றான். ஆனால், எழுப்பப்பட்ட இச்சக்தி அவனில் நிலைத்து நிற்பதில்லை; படிப்படியாக மேல் நோக்கியும் செல்வதில்லை.

44. குண்டலினி படிப்படியாக ஒவ்வொரு சக்கரத்தையும் துளைத்துக் கொண்டு மேலே செல்லும் பொழுது யோகி அற்புத தரிசனங்களையும் வல்லமைகளையும் பெறுகின்றான்.

45. மனப் பரிசுத்தமில்லாத நிலையில் பலாத்காரமாக குண்டலினி எழுப்பப்பட்டால் மனதிலே சூக்ஷ்மமாகப் பதிந்து கிடக்கும் ஆசைகள் சாதகனைக் கீழ்மையில் தள்ளும்.

46. சுழுமுனையின் கீழ் அந்தம் திறக்கப்படா திருக்கும் வரை, காமம் - குரோதம் - பேராசை - பொறாமை முதலிய தீக்குணங்கள் மனதிலிருந்து நீங்காத வரை, வீர்யம் ஓஜஸ் ஆக மாறி சகஸ்ரா ரத்தை நோக்கி மேலே செல்லாதிருக்கும் வரை தியானமோ சமாதியோ கைகூடா.

## கர்மயோகம்

47. கர்த்தாபாவனை இல்லாது, வினைப்பயனில் ஆசை வைக்காது, ஆத்மனில் சித்தத்தை நிறுத்தி, பற்றற்றுத் தொழில் புரிவதே கர்மயோகமாம்.

48. கர்மயோகத்தின் அஸ்திவாரம் நிஷ்காமிய சேவையே.

49. பற்றற்ற சேவை மனித சமூகத்தின் ஒருமை யை வளர்க்கின்றது. இதயத்தை விசாலமாக்குகின்றது. உன்னை உள்ளுணர்வின் வாசலுக்கும் இட்டுச் செல்லு கின்றது. எனவே ஓயாது பற்றற்ற சேவை செய்து உனது இதயத்தைத் தூய்மையாக்கிக் கொள்.

50. கர்மயோகம் பயிலுவதற்குக் கீழ்க்கண்ட ஆத்மீக நெறிகள் இன்றியமையாதனவாம்:-

அறநெறிக் கட்டுப்பாடு, பொறி அடக்கம், பிரம்மச்சரியம், பொறுமை, சகன சக்தி சூழ்நிலை களுக்கு ஏற்ப ஒழுகுதல், அனுதாபம், இரக்கம், தயை, சம திருஷ்டி, சம சித்தம், அகில அன்பு, விடாமுயற்சி, பணிவு, பெருந்தன்மை, தன்னடக்கம், சினம் கொள்ளாமை, மனம் - மொழி - மெய்களால் உண்மை யைக் கடைபிடித்தல், அளவுடன் உணவு அருந்துதல், அளவுடன் நித்திரை செய்தல், எளிய வாழ்க்கை முதலியன.

51. உனது வாழ்வு சுய நலனுக்காக ஏற்பட்டதல்ல, பிறர்க்கு அர்ப்பணம் செய்வதற்காகவே.

52. கர்மயோகியினுடைய வாழ்வில் ஓயாது தியாகம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இப் புனித வேள்வியில் இவன் உலகம் உய்யும் பொருட்டு, தன்னை மறந்து, தனது ஆசைகளையும், நலன்களையும், அகங்காரத்தையும் ஆஹுதியாக அர்ப்பணம் செய்கின்ருன்.

53. தர்மபுத்திரர் நடத்திய இராஜசூய யாகத்தில் மக்களுக்கு ஒரு எடுத்துக் காட்டாக மூன்றுலகங்களையும் ஆளும் சர்வ வல்லமையுள்ள ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே தனது திருக்கரங்களினுல் அதிதி கால்களைக் கழுவினுர். எனவே சாதகர்களே, வெறும் வறட்டு வேதாந்திகளே, இப்பொழுதாவது பணிவை மேற்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப் பின் பற்றுங்கள்; சேவை செய்து இதய சுத்தியையும் பெறுங்கள்.

54. மனதிற்கு வேலை கொடுத்த வண்ணம் பல கர்மங்களை மாறி மாறி பற்றற்றுச் செய்து கொண்டே போனுல் விஸ்ராந்தி தானுகவே உன்னை வந்து அடையும். அல்லாது, கர்மங்கள் அனைத்தையும் துறந்து சோம்பேறியாக உட்காருவாயாகில் விஸ்ராந்தி ஒருக்காலும் உன்னில் அமையாது; உன் மனமும் தமோ குணத்தில் ஆழ்த்தப்பட்டு கெட்ட எண்ணங்களில் நாட்டம் கொண்டு கொடிய வேதனைக்கும் உள்ளாகும்.

55. பற்றற்றுத் தொழில் புரிவதே மேலாம் இலட்சியம். இந்த இலட்சியத்தில் ஏனைய இலட்சியங்கள் யாவும் அடங்கியுள்ளன. எனவே இந்த இலட்சி சியத்தை அனுசரித்தே உன் வாழ்வைத் திருத்தி யமைத்துக் கொள்.

56. மனத்தூய்மை பெறுவதிலும், பிறர்க்கு உதவி செய்வதிலும், தன்னலத் தியாகம் செய்வதிலும் தீவிர மாக ஈடுபடு. பற்றற்ற சேவையில் தீவிரமாக முற்படும் பொருட்டு இந்திரியங்களையும் மனதையும் கட்டுப் படுத்து. யோகத்தை நடை முறையில் அனுஷ்டிப் பதற்கு இக்கட்டுப்பாடு இன்றியமையாதது, முதல் தேவையுமானது.

57. நீக்க மற எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளே யாவரிலும் அந்தர்யாமியாய் உறைகின்றார். இதை உணர்ந்து உண்மையான அன்புடன் அனை வரையும் நேசி; அனைவருக்கும் சேவை செய். அப் பொழுது உன்னில் பேரானந்தம் பொங்கும்; ஆத்மீக சக்தியும் வலுக்கும்.

58. தீவிர வைராக்கிய மில்லாத சாதகன் பற்றற்ற சேவையையும் தெய்வ வழி பாட்டையும் அவசியம் கையாளவேண்டும்.

59. அன்புடன் ஆற்றும் பணியே ஈசுவர ஆராதனை. அதுவே உனக்கு இதய சுத்தியையும் தெய்வீக சம்பத்துக்களையும் அளிக்க வல்லது.

60. மனித சமூகத்திற்கு, முக்கியமாக, வியாதி யால் அவதிப்படுபவர்களுக்கு சேவை செய்வதே ஆண்டவனுக்கு உகந்த கைங்கர்யமாகும். அதுவே அவனை அடைவதற்கும் ஒப்பற்ற மேலாம் ஹேதுவுமாகும்.

61. ஆத்மபாவத்துடன் ஒரு மணி நேரம் வியாதி யஸ்தர்களுக்குச் சேவை செய்வது ஒரு வருஷம் தீர்த் தாடனங்கள் செல்வதைக் காட்டிலும் மேலானதே.

62. பற்றற்ற சேவையின் மூலம் பரிசுத்தமடைந்த மனதிலேதான் திவ்ய ஒளியும் பிரகாசிக்கும்.

63. வாழ்க்கையின் இரகசியம் ஆண்டவனை உண்மையாக நேசிப்பதும் பற்றற்ற சேவை செய்வதுமேயாம்.

64. பெற்றோர்களுக்கும் முதியோர்களுக்கும் ஆசான்களுக்கும் அதிதிகளுக்கும் ஆத்மபாவத்துடன் பணிவிடை செய்

65. பற்றற்ற சேவையின் மூலம் பரிசுத்த மடையாத மனம் ஆத்ம தியானத்தில் நிலை பெற்று நிற்காது.

## பக்தி

66. தைல தாரைபோல் இடையறாது ஆண்டவனையே குறித்து ஓடும் ஸ்மரணை பக்தியாகும்.

67. ஆண்டவன்பால் உள்ள தீவிர விசுவாசமே பக்தியாகும்.

68. ஆண்டவனை அடைவதற்கு பக்தியே சிறந்த சாதனம். அதுவே சீக்கிரம் பலனையும் தரவல்லது. எனவே ஜபம், கீர்த்தனை, கீதை-இராமாயண-பாகவத ஸ்வாத்தியாயம், அடியார்களுக்கு பணி விடை செய்தல் முதலில் ஆத்மீக நெறிகளின் மூலம் பக்தியை வளர்த்துக் கொள்.

69. மஹாபுருஷர்களின் சத்-சங்கம் பக்தியை வளர்க்கும்; மேலாம் மேன்மையையும் நல்கும்.

70. பகவத் பக்தி காமம்-குரோதம் முதலிய தீய விருத்திகளையும் அசுத்தத் தூண்டுதல்களையும் நசித்து விடும்; ஆன்மீக வாழ்க்கையில் தோன்றும் தடைகளையும் நீக்கும்.

71. பிறப்பு இறப்புகளிலிருந்து விடுதலையடை வதற்கு உண்மையான ஈசுவர பக்தி மிகவும் இன்றி யமையாதது.

72. கீழ்மையான எண்ணங்களையும் ஆசைகளை யும் புடம் வைத்து எரித்து சுத்தப்படுத்தினால் பக்தி வளரும்.

73. உனது கண்கள் ஆண்டவனுடைய சொரூபத் தையே பார்க்கட்டும்; உனது காதுகள் அவனது லீலை களையும் கீர்த்தனங்களையுமே கேட்கட்டும்; உனது கைகள் மஹா புருஷர்கள்-ஏழைகள் சேவைகளிலேயே ஈடுபடட்டும்.

74. ஜபம் - கீர்த்தனை - ஆராதனை, தியானம் முதலிய ஆத்மீக நெறிகளின் மூலம் உனது மனோ விருத்திகளை தெய்வீகமாக்கு.

75. மானஸீகப் பூஜையே வெளிப்படையாகச் செய்யும் பூஜையைக் காட்டிலும் சிறந்தது; அதிகம் சக்தியும் வாய்ந்தது.

76. பக்தியே உபாயம்; அதுவே பயனுமாம்.

77. பக்தியில்லாது ஞானமில்லை. பக்தி மலர், ஞானம் கனி. பக்தியின் விளைவே ஞானம்.

78. விவேகமில்லையேல் விசுவாசமில்லை. விசுவாசமில்லையேல் ஆண்டவன்பால் பற்று இல்லை; ஆண்டவன்பால் பற்று இல்லையேல் பக்தியும் நீடித்து நிற்பதில்லை.

79. பூர்வ புண்ணிய வசத்தால் ஜனன மரணச் சுழலிலிருந்து விடுதலை பெறும் பாக்கியம் பெற்றவன் ஒரு குருவை நாடி அவருடைய சத்-சங்க விசேஷத் தால் பகவத் பக்தியைப் பெற்று ஈசுவரனை அடை

கின்றான். எனவே நீயும் உன்னுடைய இதயமாகிய வயலில் பக்தியாகிய விதையை ஊன்றி ஆண்டவனுடைய நாமங்களாகிய தண்ணீரைப் பாய்ச்சி மோக்ஷப் பிராப்தியை அளிக்கும் விளைச்சலை அறுவடை செய்வாயாக!

80. பக்தி ஒன்பது வகைப்படும் :- சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், சக்கியம், ஆத்மநிவேதனம். இவற்றில் ஏதாவது ஒன்றின் மூலம் பக்தியை வளர்த்துப் பரமனை அடையலாம்.

81. பக்தியே ஆன்மீகத்திற்கு அடிப்படை.

82. ஆண்டவனை அடையப் பாண்டித்தியம் தேவையில்லை; விசுவாசம்-சிரத்தை—மனத்தூய்மை—பக்தி ஆகியவையே தேவை.

83. வித்யா மாயை அவித்யா மாயை என மாயை இரு வகைப்படும்.

84. வித்யா மாயை ஜீவனை ஈசுவரனிடம் சேர்க்கும். வைராக்கியம், விவேகம், ஆத்ம தியானம் ஆகியவை வித்யா மாயையின் தோற்றங்களாம்.

85. அவித்யா மாயை ஜீவனை ஈசுவரனின்றும் பிரித்துச் செல்லும். காமம், குரோதம், உலோபம் முதலியன அவித்யா மாயையின் தோற்றங்களாம்.

## உண்மையான பக்தன்

86. எவன் அகங்கார மமகாரத்தைவிட்டு, சமதிருஷ்டியையும் - மனத்தெளிவையும் — வைராக்கியத்

தையும் – சதா ஈசுவர நினைப்பையும் கொண்டுள்ளானோ அவனே உண்மையான பக்தன்.

87. எவன் ஜீவஹிம்சை – விஷமனப்பான்மை – காமம் · குரோதம் - உலோபம் - அறியாமை முதலிய தீக்குணங்களிலிருந்து விடுபட்டுள்ளானோ அவனே உண்மையான வைஷ்ணவன் அல்லது விஷ்ணு பக்தன்.

88. எவன் யாண்டும் நன்னடத்தையில் நிலைத்துள்ளானோ, எவன் பிறர் பொருட்டே வாழ்கின்றானோ, எவன் ஈசுவரனுடைய திவ்ய நாமங்களையே அடைக்கலமாகக் கொண்டுள்ளானோ எவன் மனம் சதா ஆண்டவனுடைய பாதாரவிந்தங்களையே நாடுகின்றதோ அவனே தான் உண்மையான பக்தன், ஆண்டவனுக்கும் பிரியமானவன்.

89. பக்தனுடைய திருஷ்டியில் எல்லா ஜீவன்களும் ஈசுவர சொரூபமே. அதனால் தான் அவன் ஒரு பொழுதும் ஒருவர் மீதும் சினம் கொள்வதில்லை.

90 உண்மை பக்தன் ஆண்டவனிடம் பேரம் பேசான்; ஒரு பலனையும் எதிர்பார்த்து பக்தியும் செலுத்தான்.

91. பக்தன் உயிர் வாழ்வது ஆண்டவனை வழிபடுவதற்கே. அவனைப் பிரிந்து அவன் ஒரு கணமும் வாழான்.

92. ஆண்டவன் பக்தனைக் கடும் சோதனைகளுக்கு உட்படுத்தியே ஆட்கொள்வான். பிரகலாதன், சிபிச் சக்ரவர்த்தி, ஹரிச்சந்திரன் முதலியோர் இதற்குச் சான்றுவார்கள். எனவே நீயும் இதற்குத் தயாராக இரு.

93. பக்தர்களுக்குள்ளே ஜாதிமத பேதமோ, உயர்வு தாழ்வு மனப்பான்மையோ கிடையா.

94. பக்தனுக்குத் தன்னடக்கமும் பிறர் மனதைப் புண்படுத்தாமையும் இன்றியாதனவாம்.

95. எவ்வாறு கற்புடைய மனைவியின் மனம் வெகு தூரத்திற்கு அப்பால் வசிக்கும் தனது நாயகன் பால் இடையறாது செல்லுகின்றதோ அவ்வாறு பக்தனுடைய மனமும் தைல தாரை போன்று யாண்டும் இஷ்ட தெய்வத்தை நோக்கியே செல்லவேண்டும்.

96. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் கோபிகளுக்கு இருந்த கலப்பற்ற – அதி தீவிர – நெருங்கிய – அன்பே பக்தியின் உயர்ந்த படித்தரமாம் அதுவே பராபக்தியுமாகும். அத்தகைய அன்பு உனக்கும் இருக்குமாகில் நீயும் ஆண்டவனை எளிதில் அடைந்துவிடலாம்.

97. சாந்த பாவம், தாஸ்ய பாவம், வாத்ஸல்ய பாவம், சக்கிய பாவம், மாதுர்ய பாவம் என ஐந்துவித மனோ பாவங்கள் பக்தியோகத்திலுண்டு.

## சரணாகதியும், அனுக்கிரகமும்

98. கடவுளின் சொருபத்தையும், இலட்சணத்தையும், மகிமையையும், தெய்வீக வாழ்க்கையின் மேன்மையையும், ஆண்டவனை அடைவதினால் ஏற்படும் பலனையும் நன்றாகத் தெரிந்துகொள். அப்பொழுதான் உன்னில் சரணாகதி மனோபாவமும் பக்தியும் வலுக்கும்.

99. முழு நம்பிக்கையுடன் ஆண்டவனைச் சரணடை. அப்பொழுது உனது கவலைகள் – பீதிகள்

முதலியன யாவும் நீங்கும்; உன் மனமும் நிரந்தர நிம்மதியைப்பெறும்.

100. உன்னுடைய உடல் - பொருள் ஆவியை உண்மையாகவே ஆண்டவனுடைய பாதாரவிந்தங்களில் சமர்ப்பணம் செய். அப்பொழுது உனது யோக க்ஷேமங்களை அவரே கவனித்துக் கொள்வார்.

101. உனது அகந்தையை ஆண்டவனிடம் அர்ப்பணம் செய். உனது இச்சையை அவனுடைய இச்சையில் ஒடுக்கு. அப்பொழுது அவருடைய பூரணப் பாதுகாப்புக்கு நீ உரியவனுகி விடுவாய்.

102. சரணுகதி எவ்வளவுக்கெவ்வளவு வலுக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு ஆண்டவன் அனுக்கிரகமும் அதிகரிக்கின்றது.

103. பிரபத்திக்குத் தடையாயிருப்பவை ஆசையும் அகங்காரமுமே. எனவே எப்பொழுதும் விழிப்புடன் இருந்து இவற்றை அறவே ஒழித்து விடு.

104. "நான் உன்னுடையவனே; எல்லாம் உன்னுடையதே; உன் இஷ்டப்படியே எல்லாம் நடக்கட்டும்; நீ நியாயப்படியே நடத்துகிருய்; எனக்கு வேண்டிய எல்லாவற்றையும் தருகிருய்; நான் உன் கையிலிருக்கும் ஒரு துணைக்கருவியே" என்று ஆண்டவனிடம் கூறு. இது தான் மேலாம் சரணுகதி மந்திரம் அல்லது பிரார்த்தனை.

105. ஆண்டவன் கையில் எப்பொழுதும் ஒரு துணைக்கருவியாகவே வாழ். அப்பொழுதுதான் மனதிற்கு நிம்மதியும் சந்தோஷமும் ஏற்படும்.

106. ஹனுமான், அம்பரீஷர், பலி, விபீஷணன், சிபி முதலியோர் பிரபத்தி பண்ணி ஆண்டவனை அடைந்தவர் ஆவர்.

107. பரிசுத்தமடைந்த இதயத்தையே ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய். அப்பொழுதுதான் அவர் அருள் கிட்டும்.

108. எவ்வாறு கங்கா நதி யாண்டும் ஓயாது கடலை நோக்கியே சென்றவண்ணமாக இருக்கின்றதோ அவ்வாறு சாதகனுடைய மனமும் இடையீடின்றி சதா ஆண்டவனை நோக்கியே சென்றவண்ணமாக இருக்கின்றது.

109. ஆன்மீக வாழ்க்கையில் உனக்கு நாட்டம் ஏற்படுவதும், தடைகள் நீங்குவதும், மேலாம் ஆத்ம சாக்ஷாத்காரம் கிட்டுவதும், அனைத்தும், ஆண்டவன் அனுக்கிரகத்தையே பொறுத்துள்ளன. எனவே அவன் அனுக்கிரகத்துக்கு உன்னைப் பாத்திரமாகச் செய்து கொள்.

110. ஆண்டவன் அருள் எப்பொழுது - எப்படி - எவருக்குக் கிட்டும் என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது. ஒருவேளை அவன் அருள் தாமதித்தும் வரலாம். எனினும் மனந்தளராது சாதனையைத் தொடர்ந்தே செய்யவும்.

111. ஆண்டவனைச் சரணடை; அவனுக்காகவே வாழ். உனது கர்மங்கள் அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணம் செய். அப்பொழுது அவன் அருள் தானகவே உன்மீது சுரக்கும்.

## நாம மகிமை

112. கலியுகத்தில் மனம் அதிகம் சஞ்சலத்திற்குட்படுவதால் மக்கள் தியானமோ – வேள்வியோ –

ஆராதனையோ செய்ய அசக்தர்களாக இருக்கிறார்கள். இதையுணர்ந்து ஜபம்-கீர்த்தனங்களே முக்கிய ஆத்மீக சாதனையாக விதிக்கப்பட்டிருக்கிறது.

113. ஆண்டவனுடைய நாமமே திவ்யாமிருதம்; அடைவதற்கான மேலாம் பொக்கிஷமுமாம்.

114. ஆண்டவன் நாமாக்களை ஜபிக்காது ஒருவரும் முக்தியடைந்ததில்லை. எனவே, நீயும் முக்தியை விரும்புவாயாகில், ஜபம் செய்தே ஆக வேண்டும்.

115. உனது மேலாம் கடமை பரமன் புகழ் பாடுவதே; அவன் நாமத்தில் அடைக்கலம் கொள்வதே.

116. இறைவனுடைய நாமம் இதயத்தைப் பரிசுத்தப்படுத்தும், மனதைத் தெளிவுறுத்தும், மனதில் படிந்துள்ள கெட்ட சம்ஸ்காரங்கள் - வாசனைகள் - ஆசைகள் ஆகிய அழுக்குகளை நீக்கும், பாபங்களைப் போக்கும், மூலாதாரத்திலுள்ள குண்டலினி சக்தியை எழுப்பும், ஜீவனை இறைவனுடன் இணைக்கும், ஜனன மரணத்தையும் ஒழிக்கும். எனவே இறைவன் நாமத்தை உறுதியாகப் பற்றிக் கொள், அதையே அடைக்கலமாகவும் கொள்.

117. கடும் சோதனைகளிலிருந்து மீளுவதற்கு நாம ஸ்மரணமே உற்ற உபாயமாம்.

118. பிரகலாதன், துருவன் முதலியோர் நாம ஸ்மரணையின் மூலமே பகவானை அடைந்தவர் ஆவர்.

119. ஆண்டவனுக்கும் நாமத்திற்கும் வித்தியாசமே இல்லை; இரண்டும் ஒன்றே.

## பிரார்த்தனை

120. பிரார்த்தனை உன்னில் மேலாம் ஆத்மீக உணர்ச்சியை எழுப்புகின்றது; மனதிற்கு ஆறுதலையும்

சக்தியையும் சாந்தியையும் தருகின்றது; மனதை மேன்மைப்படுத்தி ஜீவனை ஆண்டவன் சன்னிதானத்திற்கும் இட்டுச் செல்லுகின்றது.

121. ஆண்டவனிடம் அற்பவிஷயங்களை வேண்டாதே; அவன் அருளையே வேண்டு.

122. அதிகாலையில் பிரார்த்தனை செய்; எப்பொழுதும் பிரார்த்தனை செய். அதுவே உன் பழக்கத்திலும் அமையட்டும்.

123. பரிசுத்த இதயத்திலிருந்து எழும் உண்மையான பிரார்த்தனையே ஆண்டவன் அருளை ஆகர்ஷிக்க வல்லது.

124. பிரார்த்தனையே உனது மேலாம் அடைக்கலம். எனவே அதை உறுதியாகப் பற்றிக்கொள்.

125. கஷ்டங்களிலிருந்து விடுதலையடையப் பிரார்த்தனை செய்யாதே; அக்கஷ்டங்களைச் சகிக்கப் போதிய சக்தியை அருளவே இறைவனை வேண்டு.

126. உனது கடமை பிரார்த்தனை செய்வதே. அப்பிரார்த்தனை ஆண்டவன் அருளுக்கு உரியதா இல்லையா என்பதைப் பற்றிக் கவலை கொள்ளாதே.

127. ஜீவனுக்குப் பிரார்த்தனையே ஆத்மீய உணவு; ஆத்ம பலவர்த்தனி.

## * வேதாந்தம்

128. வேதாந்தம் மெய்ப்பொருளை உணர்த்தும் தத்துவ நூலாகும்.

129. எப்பொருளை அறிந்தால் ஏனைய பொருள்கள் யாவும் அறிந்ததாகுமோ அப்பொருளை உணர்த்தும் நூலே வேதாந்தமாகும்.

---

குறிப்பு : * இங்கு அத்வைத வேதாந்தமே எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

130. "பிரம்மம் ஒன்றே மெய்ப்பொருள்; நாம சொரூபமாய் இருக்கின்ற பிரபஞ்சம் முழுதும் பொய்த் தோற்றமே" இதுதான் வேதாந்தத்தின் உட்கருத்து. இது மேலும் கூறுவதாவது :— ஜீவன் பிரம்மனேயன்றி அவனிலும் வேறல்லன்; அப்பிரம்மம் இரண்டற்ற ஏகவஸ்து; அதனது சொரூபம் சத் - சித் - ஆனந்தம்; ஆதலின் ஜீவனும் அழிவற்றவன், பரிபூரணன், ஆனந்தமயன், முக்தன்.

131. ஜீவாத்மா உண்மையில் பரமாத்மாவேதான். அவித்தையின் வலிமையினால் ஜீவாத்மா தன்னைக் கட்டுண்டவனாகக் கருதிக் கொள்கின்றான். அவித்தை நீங்கினால் ஜீவாத்மா – பரமாத்மா ஐக்கியமே.

132. வேதாந்தத்தின் நோக்கம் ஜீவனுக்கு அவனுடைய நிஜ சொருபத்தை உணர்த்தி அவனை வாழ்க்கை பிணைப்பிலிருந்து விடுவித்தலேயாம்.

133. வேதாந்தம் பரந்த நோக்கையும் விரிந்த மனப்பான்மையையும் தந்து இவ்வாழ்க்கையிலேயே விடுதலைக்கும் வழிகாட்டுகின்றது.

134. வேதாந்தத்தின் அடிப்படைகளை கிரகிக்க தீவிர - இடைவிடாத முயற்சியும், சூக்ஷ்மமான - கூர்மையான - பரிசுத்த புத்தியும் தேவை.

135. வேதாந்தம் பரோக்ஷ ஞானத்தில் ஆரம்பித்து அபரோக்ஷ ஞானத்தில் முடிவடைகின்றது.

136 உனது நிஜ சொருபம் சத் - சித்-ஆனந்தமே. இதைத்தான் வேதங்களும் சுருதிகளும் ஒன்று போல் வற்புறுத்துகின்றன.

137. நீ அம்சம் அல்ல; பூரணனே.

138. உண்மையில் நீயே அம்மெய்ப் பொருள், அம்மெய்ப்பொருளே நீ. இதை சுவானுபூதியில் உணர்ந்து விடுதலையடைவாயாக!

139. வேதாந்தம் எல்லா மதங்களையும் ஏற்றுக் கொள்கின்றது.

140. வேதாந்தம் மனிதனுடைய பீதி - துக்கம் - மோகம் - கவலைகளை நீக்கி அவனுக்கு சக்தியையும் சாந்தியையும் தருகின்றது; மனிதரிடையே வேற்று மைகளை நீக்கி ஒற்றுமையையும் வளர்க்கின்றது.

141. பிறப்பு இறப்புகளை ஒழிக்க வேதாந்தமே மேலான ஔஷதம்.

142. மெய்ப்பொருளில் தீவிர நாட்டம், சதா ஆத்மனைப் பற்றிய நினைவு, தன்னடக்கம், பணிவு, கபடமின்மை, பொறுமை, சுருதிகளிலும் குருவாக்கியங் களிலும் தன்னிலும் பூரண விசுவாசம் முதலியன வேதாந்த சாதகனின் அடிப்படையான யோக்கிய தாம்சங்களாம்.

143. வேதாந்த சாதகனுக்கு நன்னெறித் தேர்ச்சி யும் சாதனச் சதுஷ்டயங்களும் இன்றியமையாத சாதனங்களாம்.

144. ஜீவபோதத்தைக் கலைத்து விடுவதே அத் வைத வேதாந்தத்தின் குறிக்கோள். ஜீவபோதம் அகன்றால் எஞ்சியது பரபோதமே.

145. சரீர அபிமானங்களையும், குடும்பப் பற்றுதல் களையும், உலக ஆசைகளையும் - தொடர்புகளையும், கீர்த்திகளையும், கௌரவங்களையும் துற. இதைத்தான் வேதாந்தம் வற்புறுத்துகின்றது.

## மாயை அல்லது மறைக்கும் சக்தி

146. மாயை என்ற பதத்திற்கு ஜாலவித்தை, இந்திரஜாலம் என்று பொருள்.

147. உண்மை அல்லாத உலகம் உண்மை போன்று தோன்றுவதும் பின் மெய்ஞானம் ஏற்பட்டதும் அது பொய்யாக மறைவதும் ஒரு பெரிய ஜால வித்தையே.

148. ஒன்றுக்கும் பொருள்படாத ஒரு தோற்றத்திற்குத்தான் மாயை என்று பெயர். அம்மாயை சத்துமல்ல, அசத்துமல்ல.

அஞ்ஞானியின் கண்களுக்கு பிரபஞ்சம் பலப்படுவதால் அதை பொய் என்று சொல்ல முடியாது.

ஆனால் நிர் விகல்ப சமாதியில் ஜீவப் பிரம்ம ஐக்கியம் ஏற்படும்பொழுது பிரம்மத்தைத்தவிர ஒன்றும் எஞ்சுவதில்லை, உலகமும் பொய்யாகவே மறைந்து விடுகின்றது. எனவே உலகம் மித்தையே.

உண்மையைக் கூறின், பிரம்மம்தான் எப்பொழுதும் சத்தான வஸ்து, உண்மைப்பொருள். ஆனால் அப்பிரம்மமோ மாயையினுடைய சக்தியினால் அஞ்ஞானிகளுக்கு உலகமாகத் தோன்றுகின்றது.

149. பிரம்மத்தினின்று ஜகத்தைத் தோற்றுவிப்பதும் பிரம்மத்தில் ஜகத்தை ஆரோபிப்பதும் மாயையே.

150. இரண்டற்ற ஏகவஸ்துவாகிய பரம்பொருளே மாயையின் வலிமையினால் அநேக ஜீவர்களாகத் தோற்றமளிக்கின்றது.

151. மாயையிலிருந்துதான் ஸ்தூல-சூக்ஷ்ம உலகங்களும், தேகம் - இந்திரியங்கள் - மனம் ஆகியவைகளும் உண்டாயின.

152. உயிர்களின் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவை மாயையின் காரியமே.

153. ஒரு சிறு மேகம் எங்கும் சமமுகப் பிரகாசிக்கும் சூரியனை நம் கண்களுக்குத் தெரியாது மறைப்பது போன்று மாயையாகிய திரையும் எங்கும் நிறைந்துள்ள சச்சிதானந்தப் பரம்பொருளின் சொரூபத்தை நம் கண்களுக்குத் தெரியாது மறைத்து விடுகின்றது.

154. பற்றுதல் அல்லது ஆசக்தியே உனது சகல கஷ்டங்களுக்கும் மூல காரணம். அதுவே உன்னை மாய வாழ்க்கையில் பிணைக்கும் சங்கிலியுமாகும். எனவே அதை வைராக்கிய மூலம் அறுத்தெறி.

155. நித்திய ஞானம், பேரானந்தம், பராம்சாந்தி ஆகியவைகள் ஏற்கனவே உன்னில் அமைந்துள்ளன. ஆனால் அவற்றை நீ உணராதிருப்பதற்குக் காரணம் அஞ்ஞானமே.

156. மாயையிலிருந்து அஞ்ஞானமும், அஞ்ஞானத்திலிருந்து மயக்கமும், மயக்கத்திலிருந்து துவைதமும் - வேற்றுமைகளும் உண்டாகின்றன. எனவே ஆத்ம ஞானத்தின் மூலம் அஞ்ஞானத்தை ஒழித்து விடுதலையடைவாயாக !

157. தேகத்தை ஆத்மன் என்று கருதுவது அவித்தையின்பாற் பட்டதே. அதுவே தேகாத்ம பிராந்தியும் கொடிய பாபமுமாகும்.

158. ஜீவனைக் கட்டுப்படுத்துவது அவித்தையே.

159. ஒன்றை மற்றொன்றாக நினைப்பது, ஒன்றின் தன்மையை மற்றொன்றில் ஆரோபிப்பது மயக்கமே.

160. அஞ்ஞானமே பீதியையும் துவேஷத்தையும் ஆசைகளையும் வளர்க்கின்றது.

161. உள்ளுணர்வின் வாயிலாக ஏற்படும் விசேஷ ஞானமே அஞ்ஞான இருளை நீக்கவல்லதேயன்றி வேதாந்த நூல்களால் ஏற்படும் சாமான்ய ஞானம் ஒருக்காலும் அவ்விருளை நீக்கவல்லதாகாது.

162. பிரகிருதியில் சத்துவகுணம் அடங்கப்பெற்று இதர இரு குணங்களும் ஆதிக்கம் பெற்று நிற்குமாகில் அது அவித்தையாகும்.

163. பிரகிருதியில் இராஜச-தாமச குணங்கள் அடங்கப் பெற்று சத்துவம் மேலோங்கி நிற்குமாகில் அது மாயையாகும்.

164. ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் வேற்றுமையை ஏற்படுத்துவது மாயையே.

165. பிரம்மம் மாயைக்கு அதிபதி; அப்பரம்பொருளுடைய சக்தியே மாயை. அந்த சக்தி அப்பரம் பொருளுக்கு அன்னியமானதுமல்ல.

166. உண்மையில் துவைதம் என்னும் வேறுபாடே கிடையாது; வேறுபாடுகள் அனைத்தும் தோற்றமே.

167. எவ்வாறு பாம்புக்கு அதிஷ்டானங் கயிறோ அவ்வாறு மித்தையான உலகத்துக்கு அதிஷ்டானம் பிரம்மமே.

168. பிரம்மமே ஜீவனுடைய அறிவுக்கு அதிஷ்டானம்.

169. பிரம்மமே சினிமாத் திரை, அத்திரையில் தோன்றும் படமே ஜகத்.

170. தினம் கணக்கற்ற மக்கள் மடிவதைப் பார்க்கின்றோம். எனினும் நாம் மட்டும் சாகாதவர்கள் என்று நினைத்துக் கொள்கிறோம், இதுதான் மாயை.

171. மாயையின் வலிமையினால் ஜீவன் வாழ்க்கையின் படிப்பினைகளை உணர அசக்தனாகி (பிறப்பு - இறப்பு - மூப்பு - பிணி - துயரம் ஆகியவைகளில் கேடுகாணாதாகி), இந்திரிய போகங்களில் உழன்று இறுதியில் சொல்லொணாத கஷ்டத்திற்கும் ஆளாகின்றான்.

172. மாயையே மனம் மூலமாக ஜீவனை மிகவும் கீழ்மையில் தள்ளுகின்றது. அம்மாயையின் தன்மையை உள்ளபடி உணர்பவன் அதனால் பாதிக்கப்பட மாட்டான்.

173. மாயையின் காரியம் மிகவும் சூக்ஷ்மமானது அவ்வலிமை மிக்க சக்தியை இடைவிடாத விசாரணை - விவேகம் - ஆத்ம தியானம் ஆகியவைகளைக்கொண்டு அறவே ஒழித்து விடு.

174. ஜீவ - பிரம்ம ஐக்கியம் ஏற்பட்டாலொழிய மாயையின் பிணைப்பிலிருந்து விடுதலை பெற முடியாது.

175. ஜாக்ர - ஸ்வப்ன - சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளும் வெறும் தோற்றங்களே. இவற்றிற்கு அப்பாலுள்ள நான்காவது அவஸ்தையாகிய துரியாவஸ்தையே மெய்யானது.

176. அஞ்ஞானத் திரையைக் கிழித்தெறி. அதுதான் விடுதலை, மோக்ஷம்,

---

## உண்மையான சமயம். *

(சுவாமி கிருஷ்ணனந்தா)

உங்களிடம் சில வார்த்தைகள் பேசுமாறு நான் அழைக்கப்பட்டிருக்கிறேன். நீங்கள் மனிதர்கள் மட்டுமல்ல, சாதகர்கள் என்பதைத் தவிர நான் வேறு எதைக் கூறமுடியும்? நீங்கள் கடவுளின் ஒளிக்கற்றைகள். நீங்கள் தெய்வீகச் சுடர்ப் பொறிகள். நீங்கள் பரம்பொருள் என்னும் அக்கினியிலிருந்து தோன்றும் பிரகாசமான ஒளிச் சுடர்கள். நீங்கள் எங்கிருந்து தோன்றினீர்களோ அங்கே மீண்டும் செல்வதற்காகத் தீவிர முயற்சி செய்து கொண்டு துடித்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களுடைய அமைதியின்மை எல்லாம் நீங்கள் கடவுளிடமிருந்து பிரிந்திருப்பதால் ஏற்படுகிறது. அமைதியின்மை எக்காரணத்தினுல் ஏற்பட்டிருந்தாலும், இது உடலினுல் ஏற்பட்டதாகவோ இனத்தினுல் ஏற்பட்டதாகவோ, சமூகத்தினுல் ஏற்பட்டதாகவோ, விவேகத்தினுல் ஏற்பட்டதாகவோ, தத்துவத்தால் ஏற்பட்டதாகவோ மானச தத்துவ சாஸ்திரத்தினுல் ஏற்பட்டதாகவோ இருப்பினும் - இது சக்தி, ஆதாரம், வல்லமை ஆகியவற்றின் உயரிய காரணகர்த்தாவிடமிருந்து பிரிக்கப்பட்டிருப்பதனுல் ஏற்படுவதுதான். பரம்பொருளின் வாசஸ்தலத்தின் கதவுகளை நாம் திறக்கும் வரை, நம்முடைய சுபாவம் என்றும் மூடப்பட்டிருக்கும். ஓட்டிலிருந்து வெளியே வந்து ஆத்மீக ஒளி என்னும் சூரியக் கதிர்களுக்குள் பிரவேசிக்கும் வரை நாம் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. இதனை அவ்வளவு எளிதில் செய்யமுடியாது. நீங்கள் மிகவும் அதிகமாகப் படித்து, கற்றுத்துறை போனவராகி அதிகமாகச் சிந்தனை செய்தாலும் அதே நிலையில் இருப்பதை நீங்கள் காண்பீர்கள். மிகவும், அதிக துரதிருஷ்டமானது! இது ஏன் நிகழ்கிறது? ஏனெனில் நீங்கள் இன்னும் உங்களைப் பரம்பொருளுடன் இணைத்துக் கொள்ளும் கலையைச் சரியாகக் கற்கவில்லை. உங்களுடைய சுபாவத்தைப் பரம்பொருளின் சுபாவமின்மையுடன் இணைத்துச் செல்லக் கற்றுக்

கொள்ளவில்லை. இது நூல்களைக் கற்பதால் அறியப்படும் ஒன்றல்ல. இது மகாத்மாக்களுக்குச் சேவை செய்வதனுல் பெறப்படும் பொருளாகும். நாங்கள் எதைக் கற்றிருந்தாலும் – சிதானந்த மஹராஜ் அல்லது நான் - எங்களில் நாங்கள் உணரும் ஆறுதல், எங்கள் இதயங்களில் நாங்கள் பெற்றிருக்கும் தேறுதல் எல்லாம் உன்னத குருவாகிய சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களுடன் கூட, பல்லாண்டுகளாக உடனிருந்து வாழ நாங்கள் பெற்றிருந்த, மும்முறை ஆசீர்வதிக்கப்பட்ட அதிருஷ்டத்தால் ஏற்பட்டதுதான். இன்று நாங்கள் பெற்றிருக்கும் அமைதியை, நாங்கள் படித்த புத்தகங்கள் தரவில்லை. நாங்கள் சந்தித்த மக்கள் தரவில்லை. நாங்கள் அப்பியசித்த, தியானம், ஜெபம்கூடத் தரவில்லை. இதெல்லாம் அவரிடமிருந்து பெற்றவை. என்னுடைய, இச்சட வாழ்க்கையில் நான் அவரைப் போன்ற ஒருவரைச் சந்திக்கலாம் என்று ஒருபோதும் எதிர்பார்க்க முடியாது. சத்குருவாம் சுவாமி சிவானந்த மஹராஜ் வாழ்க! அவருடைய வருகையின் செய்தி அவர் ஒருபோதும் திரும்பச் சொல்லச் சளைக்காத ஒரு வாக்கியத்தில் விளக்கப்பட்டது. “வாழ்க்கையின் இலட்சியம் ஆத்ம அனுபூதி பெறுதல் ஆகும்”. எங்களுடைய மனதில் இந்த எண்ணத்தைப் பதிப்பதில் அவர் ஒரு போதும் சோர்வு கொள்ளவில்லை. இருப்பினும் அவர் ஒருபோதும், கடவுள் அனுபூதி அடைவதானது உலக உறவுகள், வேலைகள், சமூக சேவை ஆகியவற்றிற்குப் புறம்பானது என்கின்ற தவருன எண்ணத்தைக் கொள்ள அனுமதித்ததில்லை. இலேசாகக்கூட அவ்விதம் அறிவுரை கூறவும் இல்லை. இந்தப் பிரிவு ஒரு நோய். இது மக்களின் மத உணர்விற்குள் மெதுவாக படர்கிறது. இந்த நோய் உலகம் கடவுளிலிருந்து மாறுபட்டது, சேவை, தியானத்திலிருந்து மாறுபட்டது. கடவுள் மேலே இருக்கிருர் உலகம் கீழே இருக்கிறது என்று எண்ண வைக்கிறது. இது ஒரு வகையான சமயாசாரக் கொள்கை. இதனுள் நாம் நம்முடைய சமூகச் சூழ்நிலையினுல் தவருகப் பழக்கப்படுத்தப்பட்டு விட்டோம்.

இதிலிருந்து நாம் நம்மைப் படிப்படியாக, உண்மையான மதம் எது என்னும் அறிவினாலும், உண்மையான ஞான மார்க்கம் எது என்னும் அறிவினாலும், விடுவிக்க வேண்டும். எங்கும் வியாபித்துள்ள கடவுளினுள் நம்முடைய மனம் விழித்தெழுதலே மதமாகும். இது காலத்தாலும் தூரத்தாலும் அதிக தூரத்தில் உள்ள ஏழாவது பிரதேசத்திலிருக்கும், சொர்க்கத்திலிருக்கும், பரமபிதாவைக் காண்பதல்ல. மதம் என்பது கடவுள் மேலும், உலகம் கீழும் இருப்பதல்ல. கடவுள் உள்ளும் இருக்கிறார் புறத்தும் இருக்கிறார். அவர் சமூகத்தில், அரசியல் துறையில், போர்க்களத்தில், பிரதம தளபதியிடம், பிரதம மந்திரியிடம் என எங்கும் இருக்கிறார். பெருக்கிக் கூட்டும் தோட்டியிடமும் இருக்கிறார். அவர் கீழானவர்களுள் கீழானவனிடமும் இருக்கிறார். அவர் உள்ளேயும் வெளியேயும் இருக்கிறார். உடல், மனம், ஆத்துமா ஆகிய எல்லாம் அவருடைய பிரசன்னத்தினால் (முன்னால் இருப்பதால்) சக்தியைப் பெறுகின்றன. அவ்வாறிருக்கையில் மதம், உள்ளேயோ, வெளியிலோ அல்லது கோவிலிலோ இருப்பதாக நீங்கள் எவ்வாறு கூறலாம்? ஆகவே நீங்கள் மத பக்தியுடைய மனிதனாக இருப்பது எவ்வளவு கடினம் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். இன்று யாராவது தானாகவோ, கூடிவாழும் இயல்பிலோ அல்லது தேச மக்களுக்குப் பொதுவான முறையிலோ அல்லது உலக மக்களுக்குப் பொதுவான முறையிலோ மகிழ்ச்சியற்று இருந்தால் அதற்குக் காரணம் மத உண்மைகளைத் தவறான முறையில் பெற்றதுதான். நாம் பண்பாடு, தொழில் நுட்ப சாதனைகள் ஆகியவற்றில் முன்னேறி ஒரு உயர் மட்ட நாகரிகத்திற்குப் போகின்றோம் என்கின்ற தவறான உணர்வினால்தான். உண்மையில் நாம் எங்கே சென்று கொண்டிருக்கிறோம் என்ற உண்மையை அறிந்து கொள்ளவில்லை. ஒரு பொருளை நினைக்கும் போது நாம் வேறொரு பொருளை மறந்து போகிறோம். இது மதமோ பண்பாடோ கல்வியோகூட அல்ல. ஒரு காட்சியை மறந்துவிட்டு இன்னொரு தோற்றத்தை நினைவில் கொண்டிருப்பது

அறிவாகக் கொள்ளப்பட மாட்டாது. இந்த விதி அறிவின் எல்லாத் துறைகளுக்குப் பொருந்தும். வாழ்க்கையின் ஒவ்வொரு மட்டத்திலும் உள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் பொருந்தும். ஆரோக்கியத்தைப் பராமரிக்கும் அறிவு, சேவை செய்யும் அறிவு, தொழில் செய்யும் அறிவு ஆகிய எல்லாவற்றிற்கும் பொருந்தும். உங்களுடைய சிந்தனை யின் வரம்பிற்குள் நீங்கள் வாழும் வாழ்வின் எல்லாப் பிரிவுகளையும் தோற்றங்களையும் உய்த்துணர்வதே உங்களு டைய உண்மையான மதமாக இருக்கும். இது இந்து மதமல்ல. வேறு எந்த வகையான மதமும் அல்ல. இந்த மதம் ''தத்சத்'' என்னும், 'இருக்கும்' பரம்பொருளாகும். இது ஆத்மீக வாழ்க்கையாகும். மேலும் ஆன்மீகத்துவம், உலகாயதத்திலிருந்து புறம்பானது அல்ல. வாழ்க்கையில் அமர்த்தப்பட்டிருக்கும் நிலைகளிலிருந்து, நீங்கள் ஆற்றிக் கொண்டிருக்கும் கடமைகளிலிருந்து மாறுபட்டதல்ல. நீங்கள் ஆற்றும் கடமைகள் உங்கள் வாழ்வின் தேவை களின் ஒரு பகுதி ஆகும். எனவே அவை உண்மையான மதத்தின் ஒரு பகுதியாகும். நான் மதத்தைப் பற்றியும் ஆன்மீகத்தைப் பற்றியும் எவ்வளவு அதிகமாகச் சிந்திக் கிறேனோ அவ்வளவு அதிகமாக, அது என்னவென்று புரிந்து கொள்வதற்குக் கடினமாக இருப்பதை நான் உணர்கிறேன். அதை அப்பியசிப்பதற்கு எவ்வளவு கடினமாக அது இருக்கும்! ஸ்விட்ச்போர்டு எங்கே இருக் கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொண்டவுடன், எவ் வாறு ஸ்விட்சைப் போடுவது என்று தெரிந்து கொண்ட வுடன், புத்தருக்கு ஏற்பட்டது போல உடனடியான ஞானம் தோன்றும். இரவிற்கிரவே ஏற்படலாம். அவர் ஞானம் பெறுதற்கு இருபத்திநான்கு மணி நேரத்திற்கு முன்புகூட, தனக்கு என்ன நேர்ந்தது என்பதை அறிய வில்லை. கடவுளின் படைப்பின் விந்தை அத்தகையது. அண்டம் அனைத்தையும் அளக்கும் சிறிய மனிதனின் விந்தை அத்தகையது. உடலால் நீ தூசுக்குச் சமான மாக இருக்கிறாய். ஆனால் சைதன்யத்தில் நீ பேரண்டம் முழுமையுமாக இருக்கிறாய். நீ மிகவும் சிறியவனாகக்

காணப்படுகிருய். இருப்பினும் மிக்க பெரியவனுக இருக்கிருய். நீ ஒன்றும் இல்லாதவனுகக் காணப்படுகிருய். இருப்பினும் நீ எல்லாமுமாக இருக்கிருய். நீ உதவியற்றவனுகக் காணப்படுகிருய் ஆனுல் எல்லா சக்தியையும் நீ உன்னுள் கொண்டவனுக இருக்கிருய். இது மனித வாழ்க்கை, மனித சுபாவம் ஆகியவற்றின் விசித்திரமாகும்.

குருதேவ் சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களின் எல்லேயற்ற ஆசீர்வாதங்களும், எல்லாம் வல்ல இறைவனின் கருணேயும் உங்களுக்குக் கிடைப்பதற்காக வேண்டிக் கொள்கிறேன்.

ஹரி ஓம் தத் சத்!

---

* ஸ்ரீ சுவாமி கிருஷ்ணனந்தா தன்னுடைய பிறந்தநாள் ஆண்டு விழாவின் போது ஆற்றிய பிரார்த்தனேச் சொற்பொழிவு.

தமிழாக்கம் : *செல்வி M. ஜெயலட்சுமி, M. A.*

---

## சற்குருதேவ் ஸ்ரீசுவாமி சிவானந்தர் அருளிய தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| வாழ்விலும், ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் விலை ரூ. | 7-00 |
| மனமும் அதன் இரகசியங்களும் அதை அடக்கும் முறைகளும் ... | 7-00 |
| சுடர்விடும் கதைகள் ... ... | 5-00 |
| சுவாமி சிவானந்தரின் சுய சரிதை ... | 4-00 |
| ஆத்மீகக்கதைகள் ... ... | 3-00 |
| சிவானந்தரின் சத்சங்கம் ... ... | 3-00 |
| சாதன சதுஷ்டயம் ... ... | 1-50 |
| ஒளி, சக்தி, ஞானம் ... ... | 1-00 |
| விரதங்கள், விழாக்கள் ... ... | 1-00 |
| தத்துவக்கதைகள் ... ... | 1-00 |
| தெய்வீகக்கதைகள் ... ... | 1-00 |
| அந்தகர்க்கான பகவத் கீதை ... | 0-50 |
| அன்னை கங்கை ... ... | 0-50 |
| பகவான் சிவானந்தரின் ஞான விருந்து | 0-50 |
| ஞான முத்துக்கள் ... ... | 0-50 |
| சேவை செய்யவே உயிர் வாழ்கிறேன் | 0-50 |

மற்றும்

| | |
|---|---|
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் ... | 2-00 |
| ஒளிமயமான சுவாமி சிதானந்தா ... | 1-00 |
| ஸ்ரீ சிதானந்த விஜயம் ... ... | 1-00 |
| ஞான ஒளி ஊற்று (சிதானந்தர் எழுதியது) | 4-00 |
| சிவானந்த கீர்த்தனை, பஜனை நாமாவளி | 0-50 |
| கீதையும் குருதேவரும் ... ... | 0-50 |
| சர்வரோக நிவாரணி ... | 2-00 |

*புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை*

---

ஆஸ்ரமத்திற்கு வருடத்திற்கு குறைந்தது ரூபாய் ஐந்து நன்கொடை அளிப்பவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 8-ந் தேதி குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவாநந்தரின் 32 பக்கமுள்ள தமிழ் நூல் வந்து சேரும். நீங்களும் பங்குகொள்ள வேண்டுகிறோம். நன்கொடைகளை காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம், இராசிபுரம், சேலம் ஜில்லா என்ற விலாசத்திற்கு அனுப்பி வையுங்கள்.



